SRI N. K. PALANISAMI : கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், நிபுணர்கள் சொன்னதற்கும், எங்களுக்கும் அபிப்பிராய வித்தியாசம் இருக்கிறது என்று. எந்த விஷயத்தில் அபிப்பிராய வித்தியாசம் இருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : நாங்கள் மின்சாரம் போதாது என்கிறோம். மூன்றாவது திட்டக் காலத்தில் இப்போது அதிகப்படியாக உற்பத்தி செய்யவேண்டும் என்பது எங்களுடைய அபிப்பிராயம். அவர்கள் இங்கே என்ன என்ன தொழில்களுக்கு லைசென்சு கிடைத்திருக்கிறது என்பது எல்லாம் கேட்டார்கள். இவையெல்லாம் தெரிந்த பிறகு சரிப்படுத்துவதாகச் சொல்கிறார்கள். 307 திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கிடைத்திருக்கிறது . . . இதுபோல . . .

SRI K. ANBAZHAGAN : பரிசிலனையில் இருந்து வருகிற லோகநாதன் குழு தந்திருக்கிற திட்டமானது 1962-ல் இருந்து 1972 வரைக்குள் நிறைவேற்றப்பட வேண்டிய பத்து வருஷ திட்டமா? அல்லது வேறு சிலர் சொல்வது போல பதினைந்து வருஷத் திட்டமா? எது உண்மை?

THE HON. SRI R. VENKATARAMAN : தனியாகக் கேள்வி போட்டால் அதற்குரிய பதிலை அளிக்கிறேன்.

SRI N. K. PALANISAMI : மேலும் இந்தக் குழுவானது விவசாயம் இந்த மாகாணத்தில் அதிகப்படியாக அபிவிருத்தியாகி இருக்கிறதென்று தெரிவித்திருக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : I do not propose to answer questions about the contents of the report at this stage.

### *Tamil typewriters*

* 147 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) அரசாங்க இலாகாக்களின் உபயோகத்திற்காக, 1959, 1960-ம் வருஷங்களிலே எத்தனை தமிழ் தட்டெழுத்து (டைப் ரைட்டிங்) இயந்திரங்கள் விலைக்கு வாங்கப்பட்டன?

(ஆ) ஜில்லா, தாலூகாக்களிலுள்ள எல்லா இலாகா ஆபீஸ்களுக்கும் இன்னும் எத்தனை தமிழ் தட்டெழுத்து இயந்திரம் தேவை எனக் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Four hundred and eighty-three purchased as against 600 sanctioned for 1958–59 and 120 purchased as against 500 sanctioned for 1959–60.

(*b*) Six hundred and ninty-seven are yet to be purchased.

SRI P. G. MANICKAM : ஒவ்வொரு வருஷமும் சர்க்காருக்குத் தேவைப்படுகிற அளவு தட்டெழுத்து இயந்திரங்கள் வாங்கவில்லை

12th August 1960]

என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆகையால் நமக்குத் தேவைப்படுகிற இயந்திரங்கள் பூராவையும் வாங்குவதற்கு இன்னும் எவ்வளவு காலம் ஆகும்?

THE HON. SRI V. RAMAIAH: நமக்குத் தேவையாக இருக்கும் தட்டெழுத்து இயந்திரங்கள் மொத்தம் 1,300 என்று கணக்கு போடப்பட்டிருக்கிறது. அதில் 603 தான் வாங்கப்பட்டிருக்கிறது. மீதம் இருப்பதையும் விரைவில் வாங்குவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளப்படும்.

SRI K. ANBAZHAGAN: இப்போது அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிற தமிழ் தட்டெழுத்துப் பொறிகளில் உள்ள சில எழுத்துக்கள் சரியாகத் தயாரிக்கப்படாத காரணத்தினால் அடிக்கும்போது அந்த எழுத்துக்கள் சரியாக விழவில்லை என்று சொல்லப்படுகிறதே, இதை ஒழுங்கு செய்து அந்தப் பொறிகளை சரியான முறையில் தயாரிக்கச் செய்ய அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்களா?

THE HON. SRI V. RAMAIAH: அம்மாதிரி சரியாக உள்ளவற்றை வாங்க வேண்டுமென்பது தான் சர்க்காரின் நோக்கம். அதனால் தான் இயந்திரங்கள் வாங்குவதில் கூடச் சற்று தாமதமாகிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI: தமிழ் டைப்ரைட்டர்களில் வேலை செய்வதற்கு, ஆங்கில டைப்ரைட்டர்களில் வேலை செய்கிற குமாஸ்தாக்களுக்கே பயிற்சி கொடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்? இதுவரையில் எவ்வளவு பேர் பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறார்கள்?

MR. SPEAKER: Let the hon. Member put a separate question.

SRI A. VEDARATHNAM: போதுமான டைப்ரைட்டர்கள் கிடைக்காத காரணத்தினால் நம் தேவையைப் பூர்த்தி செய்ய முடியவில்லையா? அல்லது அவை கிடைத்து நாம் நம்முடைய அவசியத் தன்மைக்கு ஏற்ப வாங்காது இருக்கிறோமா? நமக்கு சப்ளை செய்கிற கம்பெனிகள் நமக்குப் போதுமான டைப்ரைட்டர்கள் சப்ளை செய்யவில்லையென்றால் வேறு இறக்குமதி பர்மிட் உள்ள கம்பெனிக்காரர்களிடம் இருந்து வாங்க முடியுமா?

THE HON. SRI V. RAMAIAH: போதுமான டைப்ரைட்டர்கள் கிடைக்கவில்லை. நமக்குத் தேவையானதை சப்ளை செய்ய இரண்டு கம்பெனிகள் முன் வந்தார்கள். ஆனால் அவர்களும் இன்னும் பூராவாக சப்ளை செய்யவில்லை.

SRI P. G. MANICKAM: நமக்கு சப்ளை செய்ய வந்த இரண்டு கம்பெனிகளுக்கும் மேற்கொண்டு சில தனிச் சலுகைகளையாவது கொடுத்து சீக்கிரத்தில் அவர்கள் நமக்குத் தேவையான தமிழ் தட்டெழுத்து இயந்திரங்களை எல்லாம் சப்ளை செய்ய ஏற்பாடு செய்வார்களா?

[12th August 1960

THE HON. SRI V. RAMAIAH : அவர்களுக்குப் போதுமான எல்லா வசதிகளும் கொடுத்து, நமக்குத் தேவையானவைகளை எல்லாம் வாங்க முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்.

*Industrial Training Centres*

* 148 Q.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் Industrial Training Institutes or Centres ஒவ்வொன்றிலும் எத்தனை பேர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டு வருகிறது ?

(ஆ) இவர்களுள் ஹரிஜனங்கள் எத்தனை பேர்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) A statement[a] containing the particulars is placed on the table of the House.

*Sericulture*

* 149 Q.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா கோபிச்செட்டிப்பாளையம் தாலுகா தாளவாடி மலைப் பிரதேசத்தில் பட்டுப் பூச்சி உற்பத்தியானது எத்தனை ஏக்கரா நிலங்களில் செய்யப்பட்டு வருகிறது ?

(ஆ) இன்னும் எத்தனை ஏக்கரா நிலங்களிலே பட்டுப் பூச்சி உற்பத்தியைப் பெருக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன ?

(இ) பட்டுப் பூச்சி உற்பத்தியைப் பெருக்குவதற்காக அரசாங்கத்தின் மூலமாக என்னென்ன உதவிகள் அளிக்கப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) 2,130 acres under mulberry on 31st March 1960.

(b) There are no specific proposals as such for expanding the acreage of mulberry. An area of 250 acres is expected to be brought newly under mulberry during this year with the aid of technical advice given by the Sericultural section of the Industries Department.

(c) The sericulturists are supplied with silkworms, silkworm eggs and mulberry grafts. They are also provided with marketing facilities for the disposal of the cocoons produced by them.

SRI P. G. MANICKAM : மேற்கொண்டு தாளவாடி மலைப்பிரதேசத்தில் தற்போது எவ்வளவு ரூபாய் மதிப்புள்ள பட்டுப் பூச்சிகள் உற்பத்தியாகின்றன ? அங்கு உள்ளவர்கள் மிகவும் ஏழைகளாதலால், அங்கே அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்ற நம்பிக்கை இருப்பதனல் இன்னும் ஆயிரம் ஏக்கராவது சாகுபடி செய்ய பிரயாசை எடுத்துக்கொள்வார்களா ?

---

[a] Printed as Appendix on page 88 infra.